ஓம்

அருள்மிகு

# கற்பக விநாயகர்

பதிகம்



**அன்பளிப்பு**

## அருள்நெறித் திருக்கூட்டம்

கண்டவராயன்பட்டி

1988

## ஸ்ரீ விசாலாட்சி மில் லிட்.,

விசாலாட்சி நகர்

**மதுரை.**



### நல் வாழ்த்துக்கள்

எங்கள் ஆலைகள், மற்றும் எங்கள்
ஸ்தாபனங்களின் சார்பில்
கற்பகப் பெருமான் திருவடி வணங்கி
நல் வாழ்த்துக் கூறுகின்றோம்.

திருவருள் கூட்டி வைக்க

லெ. நாராயணன் செட்டியார்,
தலைவர்.

ஓம்

அருள்மிகு

# கற்பக விநாயகர்

## பதிகம்



அன்பளிப்பு

**அருள்நெறித் திருக்கூட்டம்**

கண்டவராயன்பட்டி

1988

திருத்தேர் ஏறிவரும்

கற்பகப் பெருமான்



# விநாயகரின் ஆறுபடை வீடுகள்

திருவண்ணாமலை

விருத்தாசலம்

திருக்கடவூர்

மதுரை

திருச்செங்காட்டாக்குடி

சிதம்பரம்

---

-: தலைமைப்பீடம் :-

பிள்ளையார்பட்டி



அருள்மிகு

# கற்பக விநாயகர் பதிகம்

பிள்ளையார்பட்டி

அருள்மிகு கற்பகப்பெருமான்
மகா சதுர்த்தி வெளியீடு


பேராசிரியர்

ஆக்கியோர்கள்

டாக்டர் திரு. எம். மெய்யப்பன் M. A.,

புலவர்
திரு. க. கதிரேசன்

தாலாட்டுக்கவிஞர்
திரு. T. குமரப்பன்



வெளியிட்டவர்
நா. அருணசலன்

அன்பளிப்பு
அருள்நெறித் திருக்கூட்டம்
கண்டவராயன்பட்டி.

ஓம்
என் கடன் பணி செய்து கிடப்பதே

# ஒரு சில வார்த்தைகள்

தமிழகத்திலேயே பிள்ளையார்பட்டிப் பிள்ளையா மிகப்பிரசித்திபெற்ற பிள்ளையார். பிள்ளையார் கோவில் களுக்கெல்லாம் முதன்மையான திருத்தலமாகும் பிள்ளையார்பட்டி. அருள்மிகு கற்பக விநாயகர் கவலை தீர்க்கும் கற்பகமாவார்; வேண்டுவோர்க்கு வேண்டுவன வழங்கும் வள்ளலாக விளங்கித் திருவருள் புரிகிறார்.

இத்திருக்கோவிலில் விநாயகர் சதுர்த்தி பெரிய திருவிழாவாக ஆண்டுதோறும் ஆவணி மாதத்தில் 1 நாட்கள் கொண்டாடப் பெறுகிறது. மிகச் சிறப்பான வழிபாடுகள் 10 நாட்களும் விநாயகப் பெருமானுக்கு நடைபெறும் இவ்வழிபாடுகள் கண்கொள்ளாத் தெய்வக் காட்சியாகத் திகழும்.

இங்கு வந்து தரிசனம் செய்து செல்லும் பக்தர் களுக்கு ஏற்படும் வெவ்வினைகளை அகற்றி, வெற்றி கொடுப்பவர் கற்பகப்பெருமான். இவர் திருவுருவப்படம் இல்லாத இடமில்லை. ஏறிச் செல்லும் வாகனங்களிலும் இவர் திருவுருவப்படமே! அகில உலகமும் இவர் திருவுருவப்படங்கள் காட்சியளிக்கின்றன. எங்கும் நிறைந்துள்ளன.

கற்பகப் பெருமான் மகாசதுர்த்தி விழாவாகிய இன்று எங்கள் திருக்கூட்டம் 'கற்பக விநாயகப் பதிகம்' என்ற தலைப்பில் இந்நூலை வெளியிட்டுப் பக்தர்களுக்குச் சமர்ப்பிக்கின்றது பரம்பொருளான கற்பகப்பெருமானின் பெரும் புகழைப்பாடித் திருவருளைப் பெற்றுப் பெரு வாழ்வு வாழ்வார்களாக!

| | |
|---|---|
| பிள்ளையார்பட்டி | **நா. அருணாசலன்,** |
| | *செயலாளர்,* |
| விபவ ஆவணி 30 | அருள் நெறித்திருக் கூட்டம் |



ஓம்
கணபதியே நம



# அருள்மிகு கற்பக விநாயகர்

தருவும், குலமும் எழில்நலமும்
திகழ் நற்குணமும் சிறப்பு எவையும்

மருவும் மகளிர் மன்றலும் நன்
மக்கட் பேறும் வளர்கல்விப்

பொருளும் தெருளும் மெய்ஞ்ஞானப்
பொலிவும் மருதங்கூர் வாழ்

வரு கற்பகப்பேர் அண்ணல் கழல்
வணங்க வந்திடுமே செல்வம்!

(நா. அருணசலன்)

ஓம்

# அருள்மிகு சக்தி விநாயகர்



தீராத வினைதீர தேவா
உனது திருமுகம் காணவந்தால்
திருமுடி அசைத்தென்னை அருகில
வரவேற்று அன்பு செய்வாய்
தாராள நெஞ்சோடு கண்கொண்டு
கற்பகமே! நீஎன் குறைதீர்ப்பாய்
தங்கக்கட்டி மணியே தரணிபுகழ்
எங்கள் குலதெய்வமே! சக்திவிநாயகனே!

(நா. அருணாசலன்)



# வருவாய் வரமருள்வாய்

1 திருவீசர் செல்வா! திருமங்கை மைந்தா
முருகனுக்கு மூத்தவனே! முன்நின்று காப்பாய்
மருதங்கூர் ஈசனே! மங்கலம் சேர்க்க
வருவாய் வரமருள் வாய்.

2 பிள்ளையார் பட்டியிலே பீடுபெறக் கோலோச்சும்
உள்ளங்கொள் கற்பகமே ஓங்கிவளர் செல்வத்தைத்
தெள்ளுதமிழ்ப் பாவால் தெவிட்டாது பாடுகின்ற
எல்லோர்க்கும் ஈவாய் இனிது.

3 குன்றிலே வீற்றிருக்கும் கூத்தபிரான் பிள்ளையே
என்றும் உனைநாடி ஏங்கி வருவோரை
அன்பாலே கைநீட்டி ஆதரவு தந்திடுவாய்
இன்பமுடன் வாழ இனிது.

4 உலகுபோற்றும் கற்பகமே உன்வாசல் வந்து
பழகுதமிழ்ச் சொல்லாலே பாங்குடனே பாடி
வளங்கொழிக்கும் பாதம் வணங்குகின்றோம் நீயும்
அழகார்ந்த வாழ்வை அருள்.

5 காப்பாற்றும் கற்பகமே கண்கண்ட தெய்வமே
தோப்புக் கரணங்கள் போட்டதுடன் நற்பழங்கள்
சீப்புடனே தந்திட்டோம் சீர்மல்கு பிள்ளையாரே
யாப்புடனே பல்பாடல் யாத்து.

6 பொற்பாதம் போற்றுகின்றோம் போது மலர்
கொண்டு
முற்றும் உனைநம்பி முன்வைத்துப் பாடுகின்றோம்
நற்றுணை நீயெனவே நாடுகின்றோம் எங்களையும்
கற்பக மூர்த்தியே கா.

7 நாடுகின்றார் உன்னடியே நானிலத்தார் பாடுகின்றார்
தேடுகின்றார் உன்பெருமை தேசிகப் பிள்ளையாரே
பீடுபெற்ற உன்னை நம்பிப் பித்தான நல்மக்கள்
நீடுவாழக் காத்திடுவாய் நீ.

8 அன்பால் உளமுருகி ஆசையுடன் தெண்டனிட்டுப்
பொன்னும் மணப்பூவும் சார்த்திவர நாளுமே
உன்பாதம் வேண்டி உவந்து சரணடையும்
அன்பர்க்குச் செய்வாய் அருள்.

9 வணங்குவார் உன் பாதம்; வரமளிப்பாய் நீயும்
மணக்கின்ற தூபங்கள் மங்கலங்கள் தந்தே
உனதருளை வேண்டும் உலகத்தில் என்றும்
கணபதியே நீயே கதி.

10 உலகத்தார் உன்பெருமை உள்ளத்தில் கொண்டு
பலகற்றும் பாங்குடனே பல்பணிகள் செய்ய
வளங்கள் பலவற்றை வாரியே நாளும்
வலம்புரி யாரே! வழங்கு.

11 தனத்துடன் கல்வி தளரா மனமும்
எனக்குநீ தந்து எனையாள வேண்டும்
உனதடியே எண்ண உலகுபோற்றும் கண்ணார்
விநாயகரே காப்பாய் விரைந்து.

பாவாக்கம் : டாக்டர் மெ. மெய்யப்பன்
தியாகராசர் கல்லூரி
மதுரை-9





உ

பிள்ளையார்பட்டி

# அருள்தரு கற்பகப் பிள்ளையார் பதிகம்

(**கு. கதிரேசன்,** தமிழாசிரியர், குன்றக்குடி)

1 கற்பகக் கனியே! அன்பர்
கருத்தினில் திளைத்தே ஊறி
எற்பெலாம் இனிமை யூட்டும்
எம்முளத் தமுதே! எம்பால்
பொற்பெலாம் பரிந்தே நல்கிப்
புரந்திடும் வேந்தே! ஏத்தும்
சொற்பதம் கடந்தும் சொல்லின்
பொருளமை தெளிவே! போற்றி.

2 ஒளிவளர் விளக்கே உள்ளத்(து)
ஓம் என நிறையும் ஒன்றே!
அளிவளர் இமயச் செல்வி
அன்புகொண் டாடும் அன்பே!
களிவளர் அன்பர் சிந்தை
கலந்துநன் னெறியில் உய்க்கும்
தெளிவளர் தேவே! எம்மைத்
தெருட்டிடும் கோவே! போற்றி.

3 சேர்ந்த வினையாம் தூறறுத்துச்
சேரும் வினையாம் கருமாற்றும்
தேர்ந்த நீர்மை மருத்துவனாய்த்
தெளிவே அருளும் அருளுருவே!
ஆர்ந்த பிள்ளை யார்பட்டி
அருளா ரமுதே கற்பகமே!
சேர்ந்தோம் நின்தாள் புணைகொண்டோம்
சீரார் வாழ்வில் சேர்ப்பாயே.

4 முக்கட் கரும்பாம் சிவனுக்கும்
முக்கட் கனிறே!! வளர்அண்டம்
ஒக்கக் காக்கும் அன்னையுளம்
உவக்கும் மேலாம் கற்பகமே!
மிக்க துன்பம் தீர்த்தாளும்
மேலான் வேலவன் முத்தவனே!
தக்க பேறு பதினாறும்
தந்தே எம்மைக் காப்பாயே!

5 கருணை பெருகும் திருமுகமும்
காத்துத் தாங்கும் திருத்தோளும்
பெருமை வழங்கும் புழைக்கரமும்
பெற்புற் றமையக் கொண்டிங்கே
அருமைப் பேறு நல்லெண்ணம்
அடியர் வாழ்வில் அள்ளுற
ஒருமை உளத்தோ டுவந்தருளும்
ஒருவன் இருதாள் தலைக்கணிவாம்.

6 அணிதிகழ் சதங்கை சேந்த
அடிச்சிலம் பார்ப்ப[illegible]ன்பான்
மணியவிர் முடிப தக்கம்
மதாணிநற் கடகம் மின்னக்
கனி லுறு கருணை நோக்காம்
கதித்தெழும் அருவி பாயப்
பிணியவிழ் மரைத்தாள் சேப்பப்
பெருவரம் வந்த ருள்வாய்

7 இப்பொழு தெம்மை ஆள
இங்கெழுந் தருளு மூர்த்தீ
ஒப்புன தெனின் உனக்கு
நீயலால் பிறரும் உண்டோ?
எப்பொழு தென்றும் உள்ளத்(து)
இருந்தருள் செய்வாய் எம்பால்
தப்புன தெனினும் தீர்த்துத்
தடுத்துநீ ஆட்கொள் ஐயா!



8 செஞ்சாந் தணிந்த மேனியிலே
செம்பட் டசைத்துப் பிறைநுதலில்
அஞ்சாந் தணிந்து திருநீற்றின்
அழகு தவழத் திருமுடியின்
எஞ்சா நீள்மல் லிகைமாலை
இருதாள் தொட்டே எழில்கமழ
நெஞ்சால் நினையாம் சிறையிட்டோம்
நீஎங் கெழுவாய் அருள்புரிவாய்

9 அன்பரின் உள்ளக் கோயில்
அமர்ந்தொளி தரும்வி ளக்கே
நன்புலன் ஒன்றி நின்னை
நாதவென் றரற்றி மெய்யுள்
என்புநெக் குருக ஏங்கி
இருகணீர் அருவி பாயும்
அன்பிலா எமையும் ஈர்த்தாள்
ஐயனே அறிவே போற்றி.

10 கற்பகப் பெருமான் போற்றி
கண்ணிறை அழகே போற்றி
நற்பதம் அருள்வாய் போற்றி
நகரத்தார் வைப்பே போற்றி
உற்றஎம் புணையே போற்றி
உலகுளார்க் குயிரே போற்றி
மற்றுநான் அறியேன் போற்றி
மலர்க்கழல் போற்றி போற்றி.



## பொற்பலன் தருகின்ற கற்பக விநாயகனே

நாவினிக்கப் பேசி நற்பாட்டுத் தினம்பாட
ஆவினன் குடிக்கண்ணன் அருமைமிகு விநாயகனை
பூப்போட்டு வணங்கிடவே புத்தியைத் தந்துதவிப்
பா ஒன்று பாடினலே பலனையுமே தந்திடுவாய் 1

பல்லவர் காலத்திலே பார்மெச்சக் குகைக்குள்ளே
சொல்லருமைக் கற்பகத்துச் சோதிவடிப் பிள்ளையவர்
எல்லோரும் வணங்கிடவே ஏற்றமாக அவதரித்தாய்
நல்லகுணம் வாழ நாடுவாழச் செய்திடுவாய். 2

ஏற்றமுள்ள கோவிலுக்கு எங்கேதான் சென்றாலும்
பொற்புடைய தேர்பெற்ற பிள்ளையார் பட்டிபோல
கற்பக விநாயகர்கோவில் கண்டதில்லை உலகில்தான்
தெற்றவே தமிழாலே தித்திக்கப் பாடிடுவேன் 3

திருவண்ணாமலை விருத்தாச்சலம் திருக்கடவூர் மாமதுரை
திருவெண்ணெய் நல்லூரும் திருச்செங் காட்டங்குடி
அருமையான பிள்ளையார்பட்டி அடுத்துச் சிதம்பரமும
பெருமைமிகு விநாயகனின் பெரும்அருள் படைவீடே 4

[தாலாட்டுக் கவிஞர் T. குமரப்பன்.]
வேந்தம்பட்டி

---





ஓம்



# அருள்மிகு கற்பக விநாயகர்

## தமிழ் அர்ச்சனை வழிபாடு

108 போற்றி

**கற்பக விநாயகர் சந்நிதி வருக**
**கருதிய நலமெல்லாம் பெற்று மகிழ்க**

ஓம்எனும் மந்திர உருவே போற்றி
ஆம்அருள் கூட்டும் ஐங்கா போற்றி
அகரஉகர மகரம் ஆனவா போற்றி,
மகத்துவப் பொருளின் மாண்பே போற்றி,
உண்மைஅறிவு இன்பப் பொருளே போற்றி,
திண்மைசார் ஓம்ஒலிச் சேர்க்கையே போற்றி,
ஆனைத் திருமுக அரசே போற்றி,
பானை வயிற்றுப் பகவனே போற்றி,
முக்கண் *நால்வாய் மூர்த்தியே போற்றி,
தக்க தத்துவத் தலைவனே போற்றி, 10

---

* நால்வாய் = தொங்கும்வாய்

மூலம் கடந்த முதல்வனே போற்றி,
காலம் சொல்லொனாக் கணபதி போற்றி,
மூன்னுறு கடவுளாய் முகிழ்த்தாய் போற்றி,
பின்னேயும் தெய்வப் பெற்றியே போற்றி.
விக்கினம் தீர்க்கும் விநாயக போற்றி,
எக்கணமும் காத்து இரட்சிப்பாய் போற்றி,
தும்பிக்கை கொண்ட துரையே போற்றி,
நம்பிக்கை கொண்டாரின் நலமே போற்றி,
ஆண்பெண் உரு அமைந்தாய் போற்றி,
காணுறும் தந்தத்தில் காட்டினாய் போற்றி,
பெரிய ஆனைஉருவப் பெருமையோய் போற்றி,

சிறிய எலியும்என் இருக்கை என்பவ போற்றி,
திருமணம் கடந்த தேவனே போற்றி,
அருமைசேர் அருள் உருவனே போற்றி,
வல்லபை, சித்தி, மணாளா போற்றி,
எல்லாக் காட்சிக்கும் இணங்குவாய் போற்றி,
ஒலிக்கும் ஒளிதரும் ஒளியே போற்றி,
ஒலிக்கும் ஓம்எனும் மூலமே போற்றி,
உலகெல்லாம் உதரத்தில் ஒடுக்குவோய் போற்றி
பலவாம் அண்டப் பரப்பே போற்றி,
எளியோருக்கு எளிய தெய்வமே போற்றி,

மலிவாய் மஞ்சளில் மருவுவாய் போற்றி,
சாணத்தில் உருக்கொள்ளும் தலைவனே போற்றி,
காணும் அருகம்புல் காட்சியே போற்றி,
''பிடித்தால் பிள்ளையார்''எனும் பெயரே போற்றி,
படிப்புக்கு மூலப் பரமனே போற்றி
அரச மரத்தடி அமருவோய் போற்றி
அரண்மனை வேண்டா அரசனே போற்றி
ஆணவம் ஒடுக்கிடும் ஐயனே போற்றி
''நான் அற'' உக்கியை நாடுவாய் போற்றி

வேத சாத்திர வேந்தனே போற்றி,
பாதம் பக்தர்க்குப் பாலிப்பாய் போற்றி,



அமிழ்தெனும் தமிழுக்கு அணியே போற்றி
கமழ்தரு திருவடிக் கதியே போற்றி,
பரசிவ பார்வதி மைந்தனே போற்றி
வரம்தரும் மகா வடிவனே போற்றி
குமார வேலர்க்குமூத்த கோவே போற்றி
அமராவதி ஆளுநர்க்கு அண்ணலே போற்றி,
''அருட்பெருஞ் ஜோதி'' ஐயனே போற்றி,
தனிப்பெருங் கருணைத் தலைவனே போற்றி,

சன்மார்க்கம் ஓங்குறத் தாங்குவாய் போற்றி,
துன்மார்க்கம் வேரொடும் தொலைப்பாய் போற்றி,
எம்மதத் தார்க்கும் இறைவா போற்றி,
சம்மத சமரசக் கடலே போற்றி,
பிரணவ மந்திரப் பெரியோய் போற்றி,
சரணம் திருவடி தருவாய் போற்றி,
ஔஎழுத்தின் வரைவே உன்முகம் போற்றி,
ஈதே இருசெவிதுதிக்கை ஈறாம் போற்றி,
வழிபாட்டின் மூல வடிவமே போற்றி
செழித்திடச் செய்பயன் சேர்ப்பாய் போற்றி,

துதிக்கத் தித்திக்கும் துதிக்கையாய் போற்றி,
மதிப்பவர் மனதிற்கு மாமருந்தே போற்றி,
நாயகன் மேவில்லா நாயக போற்றி,
ஆயதால் விநாயகப்பெயர் அமைந்தவ போற்றி,
''நான்எனது'' அற்றவர் ஞானமே போற்றி,
மோன நிலையின் முடிவே போற்றி,
யாகப் பயன்தரும் தியாகனே போற்றி,
போகமும், யோகமும் பொருத்துவாய் போற்றி,
எந்தத்தொடக்கமும் காப்பிற்கு எழுந்தருள்பவ போற்றி,
வந்து பூர்த்திதந்து மகிழ்விப்பாய் போற்றி.

தனக்கு உவமையில்லாத் தலைவா போற்றி,
மனக்கவலை தீர்க்கும் மன்னவா போற்றி,

இனிப் பிறவாமை தரும் இனியவா போற்றி,
கனிந்திடும் கருணை காட்டுவாய் போற்றி;
அருவுடன் உருவமும் ஆனாய் போற்றி
குருவுடன் தெய்வமாய்க் குலாவுவாய் போற்றி,
அறம்,பொருள், இன்பம் அருகே போற்றி,
முறையே முக்தி தருக போற்றி
முளைக்கு உபாசனை அண்டவா போற்றி,
பவ இருள் போக்கும் பரிதியே போற்றி,
முன்னவா யானை முகத்தவா போற்றி, 80

மன்னவா சரணம் மாதேவா போற்றி
விதிக்கெல்லாம் விதிசெய்யும் விமலனே போற்றி
பதி பசு பாசப் பழமையே போற்றி,
"உணர்வு"எனும் அநுபூதி உச்சமே போற்றி,
கனந்தொறும் பதியெனும் கணபதி போற்றி,
கற்பகத்தருவிற்கும் தரும் கற்பக போற்றி,
பிற்பிறவி ஒழிக்கும் பிரமமே போற்றி,
சரணம் அடைந்தால் தன்னைத்தருவோய் போற்றி.
மறந்தும் முனைப்புரின் மறைகுவோய் போற்றி, 90

சிவகணபதி, நின் சிறப்புக்கள் போற்றி,
அவம்நீக்கித் தவவாழ்வு அருளுவாய் போற்றி,
உருவத்தில் ஒப்பற்ற உருவமே போற்றி,
கருத்திற்கு இனிய காட்சியே போற்றி,
வலம்புரியாய்த் துதிக்கை வளைத்தாய் போற்றி,
வலக்கையில் சிவலிங்கம் வைத்தாய் போற்றி,
நகரத்தார் போற்றும் நற்செல்வமே போற்றி,
அகம்நீதி அமைந்தார்க்கு அருள்பவ போற்றி,
ஆவணிச் சதுர்த்திக்கு அதிபனே போற்றி,
மேவிடும் திருவிழா வேந்தனே போற்றி, 100

எத்திசையும் புகழ்மணக்க இருப்பவ போற்றி,
நித்தியம் பக்தர்வரும் நின்சந்நிதி போற்றி,
குன்றமே வடிவாய்க் கொண்டோய் போற்றி,



கொண்ட குடைவரைக் கோயிலோய் போற்றி,
பிள்ளையார் பட்டிப் பிரானே போற்றி,
எல்லோர்க்கும் அருள் ஈசனே போற்றி,
அற்புத நலமெல்லாம் அருளுவாய் போற்றி,
கற்பக விநாயகக் கடவுளே போற்றிஓம்! 108

சுபம்

# கற்பகத்தின் கற்பகமே

ஏது கேட்கினும்தரும் கற்பகத்தருவிற்கும் இரங்கி

அது கேட்கும் கொடை அருளும் கடவுளாம்

கற்பக விநாயகனின் சந்நிதிவந்து கசிந்துருகிப்

பொற்பாதம் வேண்டுவார் கேட்கும்வரம்
பொய்த்ததில்லை, பலிக்குந்தானே!

ஆக்கியோன்,
ஜோதி குமாரவேலு
சன்மார்க்க சங்கம்
அமராவதி புதூர்

நல்வாழ்த்துக்கள்

மஹாலெக்ஷிமி பைனன்ஸ்
ராஜாஜி தெரு,
கரூர்

ருக்மணி திரையரங்கம்
சாலை ரோடு, திருச்சிராப்பள்ளி.

நல்வாழ்த்து

என். பழனியப்பன்
மேலாளர்

இராம. சேதுராமன் செட்டியார்
உரிமையாளர்
முப மு. ராம. இல்லம்
கொப்பனாபட்டி.

நல்வாழ்த்து

அண்ணாமலை மெடிக்கல்ஸ்
கரூர்

தீபா லக்கி சென்டர்
110, மேட்டுத் தெரு,
9, நியூ பஸ் ஸ்டாண்ட், கரூர்
போன்: 234 92 பின்: 639001

நல்வாழ்த்து

அரு. ராமசாமி
உரிமையாளர்

நல் வாழ்த்து

ஸ்ரீ பழநி ஆண்டவர் மெடிக்கல்ஸ்
திருப்புத்தூர்

இதயம் கனிந்த வாழ்த்துக்கள்

லெட்சுமி சுந்தர் மெடிக்கல்ஸ்
மதுரை.

நல் வாழ்த்து

எஸ். எஸ். பி. கம்பெனி
தஞ்சாவூர்

நல்வாழ்த்துக்கள்



## லெட்சுமி பேப்பர் ஸ்டோர்

கீழ ஆவணி மூல வீதி

மதுரை.

---

எங்கள் இதயம் கனிந்த வாழ்த்துக்கள்



## தனலெட்சுமி இரும்பு தொழிற்சாலை

தெற்காவணி மூல வீதி

மதுரை

---

எமது வாழ்த்துக்கள்



## ஜோதி மெடிக்கல்ஸ்

செக்காலை ரோடு

காரைக்குடி

---

கற்பகப்பெருமான் திருவருள்

என்றும் துணை நிற்க



## சரவண மின்பொருள் விற்பகம்

செக்காலை ரோடு

காரைக்குடி

---

*With the best compliments from :*

Phone No: **20482**

## M/s. Meenakshi Pharmaceutical Distributors

### MEENA AGENCIES

2426, Ellaiamman Koil Street,

**THANJAVUR - 613 009.**

Stockist For :-

- SG Pharmaceuticals
- Cadila
- Indon
- SPL
- Alembic
- Albert David
- Ethnor
- Geoffrey Manners
- Bevit
- Boehringer Knoll
- Mas Pharma Labs
- Mas Products
- TTK
- John Wyeth
- TTK VET
- Gufic
- Unique
- PCI
- Themis
- IDPL
- Jersy Pharma
- TCF
- SOL
- CFL
- Elder
- Glindia Pulsar
- Infar India
- AFD
- FDC

---

## எக்ஸ்போ மெடிக்கல்ஸ்

85 பி, மார்க்கட் ரோடு, தஞ்சாவூர்.

போன் எண்: 21309, வீடு 22396.

நல் வாழ்த்துக்கள்

## அ. மு. சித. முத்தையா செட்டியார்

குருவிக்கொண்டான்பட்டி

உரிமையாளர்